# காயலின் இறைநேசச் செல்வர்கள்

அல்ஹாஜ் R.S. அப்துல் லத்தீபு M.A.,




வெளியீடு: சுலைமானியா பப்ளிஷர்ஸ்

# காயலின் இறைநேசச் செல்வர்கள்

எழுதியவர்.

அல்ஹாஜ் *R. S.* அப்துல் லத்தீபு. M. A.

வெளியிடுவோர் :

சுலைமானிய்யா பப்ளிஷர்ஸ்

28, நாராயண சாரங் கார்டன் தெரு, சென்னை- 600 001.

அஞ்சல் பெட்டி எண் 1886, தொலைபேசி எண்: 517396

# முன்னுரை

அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

நஹ்மதுஹூ வ நுஸல்லி அலா ரஸூலிஹில் கரீம்

அல்லாஹூ தஆலாவின் பேரருளாலும் அவனுடைய திருத்தூதுவர் முஹம்மதுர் ரஸூல் (ஸல்) அவர்களின் நல்லாசியாலும் வலீமார்களின் துஆ பரக்கத்தாலும் இச்சிறிய நூல் வெளிவருகிறது.

அல்ஹம்ந்து லில்லாஹ்

காயல்பட்டினம் வலீமார்களின் கோட்டை. பல ஆயிரக் கணக்கான இறைநேசச் செல்வர்கள் இவ்வூரில் பிறந்து, வாழ்ந்து, மறைந்துள்ளார்கள். ஆனால் சில ஒளலியாக்களின் வரலாற்று குறிப்புகள்தான் அறியக் கிடக்கின்றன. காயல் பட்டினத்தில் இஸ்லாமிய குடியேற்றம் தோன்றி இன்றைக்கு ஏறத்தாழ 1180 வருடங்கள் ஆகின்றன. மறைந்த இறை நேசச் செல்வர்களுக்கும், புகழ் வாய்ந்த பெரியார்களுக்கும் இன்றுபோல் அன்றும் மீஸான் கற்கள் வைத்து பெயர், இறந்த காலம் போன்ற அவசிய குறிப்புகளைப் பொறித்துள் ளார்கள். இருபதாம் நூற்றுண்டின் மத்திய பகுதிவரை இவ்வூர் மக்கள் இங்குள்ள கல்வெட்டுகள் மற்றும் கல்லறைக குறிப்புகளைத் தேடிப் போய் சேகரித்ததாக தெரியவில்லை. அப்படி துருவி எடுக்க வேண்டிய ஆசையும் அவசியமும் ஏற் படவில்லை போலும். ஆனால் இக்காலத்தில் ஒவ்வொரு ஊர்வாசியும் அவர்களின் ஊரில் பிறந்த நாதாக்கள், அறிஞர் போன்ற சிறந்தவர்களின் சரித்திரங்களை அறியவேண்டியது இன்றியமையாதது. காயலின் வலீயுல்லாக்களின் வரலாற்றுக் குறிப்புகளைத் தேடும்போது இவ்வூரின் வரலாற்றுக் குறிப்பு களும் கிடைத்துள்ளன.

காயல்பட்டினத்தின் சரித்திரத்தை அந்தக் காலத்தில் வாழ்ந்த நாதாக்களும், அறிஞர்களும் அரபியிலும், அரபுத் தமிழிலும், தமிழிலும் எழுதி வைத்துள்ளார்கள். சில குறிப்பு

கள் கிடைதவன. மற்றவைகள் மறைந்து கிடக்கின்றன. வரலாற்று ஆசிரியர்களும் இவ்வூர் வந்த பயணிகளும் இவ்வூரைப் பற்றி எழுதிய நூல் குறிப்புகள் சில கிடைத்து இருக்கின்றன. விஞ்ஞான வளர்ச்சியடைந்த இந்நவீன காலத்தில் சரித்திரத்தை எழுதும் போது ஆதாரங்களுடன் எழுதுவது மிகவும் அவசியமாக இருக்கிறது. எனவே சென்ற பத்து வருடங்களாக இவ்வூரில் சில கல்வெட்டுகள், பழைய மீசான் கற்கள், பழைய ஓலைச் சுவடிகள் மற்றும் நூற்களைத் தேடிப் பார்த்து ஆதாரங்களை எடுத்து இருக்கிறோம். கற்புடையார் பள்ளி, காட்டு மகுதூம் பள்ளி, கொடிமர சிறு நெய்னார்பள்ளி மற்றும் சில பள்ளிவாயல்களில் இன்றும் கல்வெட்டுக் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. காயல்பட்டினத்தின் பழமையான பள்ளிகளான பெரிய ஜும்ஆ பள்ளி, கடற்கரை பள்ளி, கடற்கரைப் பள்ளியைச் சுற்றிய பகுதி, மகுதூம்பள்ளி, சின்ன ஜும் ஆபள்ளி, கற்புடையார் பள்ளி, மற்றும் சில பள்ளிகளின் அடக்கஸ்தலங்களை சென்று பார்த்ததில் பல மீசான் கற்களின் எழுத்துக்கள் சரியாக அறியமுடியா வண்ணம் அழிந்து விட்டன. பல கற்கள் பூமியில் புதைந்து விட்டன. தெளிவாக தெரியமுடிந்த ஒரு சில மீஸான் கற்களின் குறிப்புகளை எங்கள் ஊரைச் சேர்ந்த சில ஆலிம்களும், நண்பர்களும் நானும் போய் சேகரித்தோம். அந்த அருமையான குறிப்புகள் இந்நூலில் இடம் பெறுகின்றன.

என்னால் இயன்ற வரையில் பாடுபட்டு கிடைத்த தகவல்களை வைத்து இந்நூலை எழுதியுள்ளேன். மேலும் இவ்வூரில் வாழ்ந்த இறைநேசச் செல்வர்களைப் பற்றிய ஆதாரபூர்வமான செய்திகள், கல்வெட்டு குறிப்புகள் இருந்தால் பெருநோக்கத்துடன் எனக்கு தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். இப்பணியில் எனக்கு ஆர்வம் அளித்து ஊக்குவித்தவர்களை நான் நன்றியுடன் நினைவு கூர்கிறேன். இந்நூல் வெளிவர என்னோடு ஒத்துழைத்தவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

காயல்பட்டினம்
10—1—1992

தங்கள் அன்பன்,
இஸ்லாத்தின் ஊழியன்,
*R. S.* **அப்துல் லத்தீபு**

# பதிப்புரை

புகழனைத்தும் அல்லாஹு தஆலாவுக்கே; ஸலாத்தும் ஸலாமும் அவனது திருத்தூதர் ஈருலக இரட்சகர் முஹம்மது நபி (ஸல்) அவர்களது உற்றார் உறவினர், ஸஹாபாக்கள், முஃமீன்கள் அனைவர்கள் மீதும் உண்டாவதாக.

ஒவ்வொரு ஊருக்கும் ஒரு சிறப்பு உண்டு. அந்த முறையில் எங்கள் ஊர், வலிமார்கள் அதிகம் அடங்கிய ஊர். இறைவனின் இல்லம் நிறைந்த ஊர். அந்த வலிமார்களின் சிறப்பே எங்கள் ஊருக்குமுதல் சிறப்பு. இப்பொழுது உங்கள் கையில் இருக்கும் இந்த நூல் நண்பர் அல்ஹாஜ் R. S. அப்துல் லத்தீபு M. A. அவர்களால் தொகுத்து எழுதப்பட்டதாகும்.

அவர்கள் இப்பொழுது எழுதி இந்த நூலில் வந்திருக்கும் வரலாறுகள் 500 ஆண்டுகளுக்கு மேல் 1000 ஆண்டுகளுக்குள் வாழ்ந்த வலிமார்களின் வரலாறு ஆகும். இது அல்லாமல் இதில் குறிப்புகள் வராத வலிமார்களுள் முக்கியமான சில பெயர்களாவன:

1. உமர் வலியுல்லாஹ் (ரஹ்)

2. தைக்கா சாஹிபு வலி (ரஹ்); இவர்கள் உமர் வலியுல்லாஹ் அவர்களின் மகன் ஆவார்கள்.

3. பெரிய லெப்பை அப்பா வலி

4. சின்ன லெப்பை அப்பா வலி

5. பேர் மஹ்மூது மஜ்தூப் வலி

6. சின்ன ஷம்சுத்தீன் வலி

7. ஸாம் ஷிஹாபுத்தீன் வலி

8. பெரிய முத்துவாப்பா வலி

9. சின்ன முத்துவாப்பா வலி

10. காசீம் புலவர் நாயகம் மற்றும் பலர்.

இன்ஷா அல்லாஹ், இந்த நூலின் அடுத்த பாகத்தில் மற்றவர்களைப் பற்றி எழுதி வெளியிட இறைவன் உதவி புரிவானாகவும், ஆமீன்.

இந்த நூலை எழுதி தந்தவர் ஒரு வலியின் சந்ததி ஆவார்கள். இந்த நூலில் ஏதும் குற்றம் குறை இருப்பின் ஆசிரியர் அவர்களுக்கும் எங்களுக்கும் தெரிவிப்பின் அடுத்த பதிப்பில் நிறைவு செய்வோம்; நிறைவு இருப்பின் அதையும் தெரிவித்தால் அதற்காக இந்த நூலை வெளியிட உதவிய இறைவனுக்கு நன்றி தெரிவித்து துஆ இறைஞ்சுவோம்.

வஸ்ஸலாம்.

உரிமையாளர்,
சுலைமானியா பப்ளிஷர்ஸ்

# பொருளடக்கம்

# இறைநேசச் செல்வர்கள் யார்?

ஒலி (வலீ) என்பதற்கு நெருங்கியவர் என்பது பொதுவான பொருள். ஒலியின் பன்மை ஔலியா. ஔலியா என்பதற்கு மூமின்கள் தங்களது ஆத்மார்த்த நெருக்கத்தினால் ஈடேற்றமடைந்தவர்கள் என்பது கருத்து. ஏனென்றால் அவர்கள் தங்கள் வணக்கத்தினால் அல்லாஹுதஆலாவிடம் நெருங்கியிருக்கிறார்கள் இன்னும் அவனது ஞானத்திலே மூழ்கியிருக்கிறார்கள். நிச்சயமாக அல்லாஹுதஆலாவின் வலிமார்களுக்கு பயமுமில்லை, இன்னும் அவர்கள் துயருறவுமாட்டார்கள் என்று அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான். எவன் என்னுடைய வலியைப் பகைத்தானோ அவன் என்னுடன் போர்செய்ய ஆயத்தமாகிவிட்டான். என்னுடைய வலிமார்களுக்கு உதவி செய்வதில் நான் தீவிரமானவன் என்று அல்லாஹ் கூறுகின்றான். அவ்லியாக்கள் என்ற அருள்நேசச் செல்வர்கள் அல்லாஹ்வினால் அங்கீகரிக்கப்பட்ட சான்றோர்கள்.

அல்லாஹுதஆலாவின் வலிமார்களைப் பார்த்தால் அவர்கள் மூலமாக அல்லாஹுதஆலாவின் ஞாபகமுண்டாகி விடவேண்டும்; இவ்விதமான ஞாபகத்தை ஊட்டக்கூடியவர்கள்தான் வலீமார்களாக இருக்கமுடியும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். இறைநேசச் செல்வர்கள் என்பவர்கள் பல்லாண்டுகாலம் தங்கள் உள்ளத்தோடு போராடி இச்சைகளை அடக்கி, புலன்களைக் கட்டுப்படுத்தி, மனதை ஒருமைப்படுத்தி இறைத்தன்மையில் மூழ்கியவர்கள். உளமும் புறமும் அறிந்தவர்கள். காலவரம்பைக்

கடந்தவர்கள். இறைவனது விருப்பத்தையே தங்களது நாட்டமாகவும் தேட்டமாகவும் கொண்டவர்கள். அல்லாஹ் சர்வசக்திகளையும் சன்மானமாக அளித்தும் தங்களுக்கென அவைகளைப் பயன்படுத்தாதவர்கள். மக்களின் இம்மை வாழ்வையும் மறுமைவாழ்வையும் செம்மைப்படுத்துவது ஒன்றையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டவர்கள்.

நுபுவ்வத்தும், விலாயத்தும் அல்லாஹ் தான் நாடியவர்களுக்கு மட்டும் கொடுப்பான். இதில் அடியான் முயற்சிக்கு கொஞ்சமும் சம்பந்தமில்லை. நபித்துவத்திற்கு நுபுவ்வத் என்று பெயர். விலாயத் என்பது அல்லாஹுதஆலாவை அறிவதும், தங்களது நப்ஸுகளை அறிவதுமாகும். அல்லாஹுதஆலாவை அறிவது என்பது முஹம்மத் என்னும் பார்வையைக் கொண்டு அவனைப்பார்ப்பதுதான். நப்ஸை அறிவது என்பது நப்ஸின் தன்மையும் அதன் நிலையும் வெளியாகும்போது பகை என்றபார்வையைக் கொண்டு அதனைப் பார்ப்பது தான். இறைநேசச்செல்வர்கள் தங்கள் பிறவிக்குணங்களை ஷரீஅத்தைக் கொண்டும், தங்கள் நப்ஸுகளை தரீக்கத்தைக் கொண்டும், தங்கள் இருதயங்களை மஅரிபத்தைக் கொண்டும், தங்கள் ஆத்மாக்களை இரகசியங்களைக் கொண்டும் சீர்திருத்திக் கொண்டிருக்கிறார்கள். எனவே அவர்கள் அல்லாஹுதஆலாவைத் தவிரவுள்ள மற்ற யாவற்றையும் தவிர்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இறைநேசச் செல்வர்களின் சிறப்பைப் பற்றி குறிப்பிடும்போது நபிகள் நாயகம் (ஸல்) கூறுகிறார்கள், வலிமார்களின் பொருட்டால் நீங்கள் உணவளிக்கப்படுகிறீர்கள். இவர்கள் பொருட்டால்தான் உங்களுக்கு மழை பொழிகிறது. இவர்கள் பொருட்டால் தான் அல்லா

ஹூதஆலா உங்களை, கஷ்டங்களை விட்டும் அகற்றுகிருன். இறைநேசச் செல்வர்கள் கியாமத்து நாள்வரை தோன்றிகொண்டே இருப்பார்கள். உலகில் எப்போதும் 440 வலிமார்கள் இருந்து கொண்டே இருப்பார்கள். இவர்களில் நுஜபா, நுகபா, அப்தால், அஹ்யார். உறபா, அன்வார், ஔதத்தாத், முக்தார், குத்பு என்ற பதவி அடிப்படையில் இருப்பார்கள். குத்பு ஒருவர் தான்; இவரை கௌது என்றும் அழைப்பார்கள். குத்பு தான் எல்லா இறைநேச செல்வர்களுக்கும் தலைவர். இவர்கள் கொண்டே இறைவன் இவ்வுலகை ஆட்சி செய்கிருன். இவர்களில் ஒருவர் இறந்தால், அவருக்கு கீழ் உள்ளவர் அவ்விடத்திற்கு உயர்த்தப்படுகிருர்.

"குத்பு" எனப்படும் இறைநேச செல்வர்களின் தலைவர் அகிலத்தின் அச்சாக இருக்கிருர். உலகில் அவர்கள் இறைவனின் பிரதிநிதியாக திகழ்கிருர்கள். சுல்தானுல் ஆரிபீன் செய்யிது அஹ்மது கபீர் ரிபாயீ (ரலி) அவர்கள், குத்புல் அக்தாப் முஹியித்தீன் அப்துல் காதிர் ஜெய்லானி (ரலி) அவர்கள் எய்திய தானத்தை வேறு யாரும் அடையவில்லை என்று கூறியுள்ளார்கள். "எனது பாதம் சகல ஒலிமார்களின் தோள்மீதிலாய் இருக்கும்" என்று குத்துபுல் அக்தாப் கௌதுல் அஃலம் அவர்கள் உரைத்திருக்கிறார்கள். செய்யிது அஹ்மது கபீர் ரிபாயி, குதுபுல் ஹிந்த் காஜா முனுயீத்தீன் ஜிஸ்தி (ரலி) இமாம் அபுல் ஹசன் ஷாதலி (ரலி), செய்யிதுனா சாஹுல் ஹமீது (ரலி) போன்ற நாதாக்கள் தலை சிறந்த குத்புயார்களாக விளங்கியுள்ளார்கள்.

காயல்பட்டினத்திலுள்ள மகுதூம்பள்ளி மையவாடியில் மட்டும் 12,000 இறைநேச செல்வர்கள் அடங்கப்பட்டிருப்பதாக தைக்கா சாகிப் வலியுல்லாஹ் கூறியுள்ளார்கள். இதைவிட பழமையான மையவாடிகள் பல

இருக்கின்றன. அவ்விடங்களிலும் பல ஆயிரக்கணக்கான வலிமார்கள் அடங்கப்பட்டிருப்பதாக நாதாக்கள் சொல்லியிருக்கிறார்கள். சாஹுல் ஹமீது நாயகம் இவ்வூர் வந்தபோது, உங்கள் ஊரில் குத்புமார்களும், வலிமார்களும் தோன்றிக் கொண்டே இருப்பார்கள் என்று துஆ செய்திருக்கிறார்கள். இவ்வூரில் தோன்றிய சில மூத்த வலிமார்களின் வாழ்க்கைக் குறிப்புகள் இந்நூலில் இடம் பெறுகின்றன.

1. செய்யிது அஹ்மது வலியுல்லாஹ் : (மரணம் ஹிஜ்ரி 430 கி. பி. 1038) மீஸான் கற்களில் (கல்லறைக்கற்கள்) இவர்களுடையது முதுமையானது. இம்மகான் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த இறைநேசச் செல்வர். இவர்களின் அன்பு தந்தை ஷாஹிது அவர்களும் அருமைப் பாட்டனார் முஹம்மது கரீம் மதனீ அவர்களும் காயல்பட்டனத்தில் வாழ்ந்து மறைந்த மாமேதைகளாம். மகான் முஹம்மது கரீம் மதனீ அவர்கள் 1100 ஆண்டுகளுக்கு முன் உலகிலுள்ள சிறந்த இரு நகரங்களில் ஒன்றாகிய மதினா மாநகரிலிருந்து காயல்பட்டினம் வந்து சேர்ந்தார்கள். சிறுவர்களுக்கு குர்ஆனை ஓதி கொடுத்தும் பெரிய மாணவர்களுக்கு நஹ்வு, பிக்ஹு, ஹதீது போன்ற மார்க்க கலைகளைப் போதித்தும் இருக்கிறார்கள். திருநெல்வேலி சீமையில் இஸ்லாமிய மார்க்கத்தைப்பரப்ப பாடுபட்டுள்ளார்கள். இவர்களுடைய மகன் ஷாஹிது அவர்களும் மார்க்க சேவைகள் பல செய்துள்ளார்கள்.

செய்யிது அஹ்மது வலியுல்லாஹ் காயல்பட்டினம் கடற்கரைப் பள்ளியில் பல ஆண்டுகள் இமாமாகஇருந்து சீரிய முறையில் பணி ஆற்றியுள்ளார்கள். மாணவர்களுக்கு குர்ஆனை முறைப்படி ஓதிகொடுத்து இருக்கிறார்கள். சில மாணவர்களுக்கு குர்ஆனை மனப்பாடம்

செய்ய கற்பித்துக்கொடுத்து சிறந்த ஹாபிழ்களாக் ஆக்கியுள்ளார்கள். அரபி இலக்கணம், இலக்கியம், சட்டம், வரலாறு, வானசாஸ்த்திரம் போன்ற பல பாடங்களையும் கற்றுக்கொடுத்து இருக்கிறார்கள். ''கைருகும் மன் தஅல்லமல் குர்ஆன வ அல்லமஹூ''—குர்ஆனைக் கற்று பிறருக்கும் அதைக் கற்றுகொடுப்பவரே உங்களில் சிறப்புடையோர்'' என்னும் நபி மொழிக்கு ஒப்ப செய்யிது அஹ்மது வலியுல்லாவும் அவர்களின் பெற்றோர்களும் திகழ்ந்துள்ளார்கள். இவர்களுடைய காலத்தில் மக்கள் இன்றுள்ள கோசுமறை பகுதியில் மிகுதியாக வாழ்ந்துள்ளார்கள் என்பதை அப்பகுதியில் இன்றும் காணக்கிடக்கின்ற பல பழமையான கல்லறைகள் மூலம் அறியலாம். ஆனால் அந்த மீஸான்கற்களிலுள்ள பெயர்களும் வருடங்களும் எழுத்துகள் அழிந்தமையால் சரியாக அறியமுடியவில்லை. சிறந்தமார்க்க விற்பன்னராகவும், மரியாதைக்குரிய மகானுமாகவும், கண்ணியமான இமாமாகவும் திகழ்ந்த செய்யிது அஹமதுவலியுல்லாஹ் அவர்கள் ஹிஜ்ரி 430ஆம் வருடம் துல்ஹஜ்ஜு மாதம் பிறை 8யில் மரணமாகி அடங்கியுள்ளார்கள். இவர்களின் கல்லறை முஹியித்தீன் மெட்ரிக்குலேசன் மேல் நிலைப்பள்ளி விளையாட்டு திடலுக்கு வடகிழக்காக சுமார் ஒரு பர்லாங் தூரத்தில் கடலோரமாக இருக்கிறது. இதன் அண்மையில் இன்று கோசுமறைப் பள்ளி இருக்கிறது. அக்காலத்தில் இதற்கு கடற்கரை பள்ளி என்று பெயர் இருந்து இருக்கலாம். அல்லது கடற்கரைப் பள்ளி அழிந்தபின் கோசுமறைப் பள்ளி உண்டாகி இருக்கலாம். செய்யிது அஹ்மது வலியுல்லாஹ் அவர்களின் சமகாலத்து சிறந்த இறைநேசச் செல்வர் திருச்சியில் அடங்கியுள்ள தப்லே ஆலம் நத்ஹர் வலியுல்லாஹ் (ஹிஜ்ரி 347-417) ஆவார்கள். இவர்களிடையே ஆன்மீக தொடர்பு இருந்தது என்பதுகுறிப்பிடத்தக்கது.

## 2. மகான் ரஷீதுத்தீன் மன்னான் :

(மரணம் ஹிஜ்ரி 502. கி. பி. 1108)

இம்மகான் காயல்பட்டினத்தில் மிகவும் பழமையான பள்ளியும் முதன்மையான பள்ளியுமாகிய பெரிய ஜும்ஆ பள்ளி மையவாடியில் அடங்கியுள்ளார்கள். இப்பள்ளியை ஹிஜ்ரி 228-யில் கெய்ரோவிலிருந்து வந்த முஹம்மது கல்ஜியும் மற்றும் அவர்களுடன் வந்த நாதாக்களும் கட்டினார்கள். இப்பள்ளியை சுல்தான் ஜமாலுத்தீன் அவர்கள் ஹிஜ்ரி 739யில் புதுப்பித்து பிரமாண்டமான முறையில் கட்டி முடித்தார்கள். சரித்திர புகழ்பெற்ற இப்பள்ளி மையவாடியில் பல ஆயிரக்கணக்கான இறைநேசச் செல்வர்கள் அடங்கியுள்ளார்கள். இங்கு பல பூர்வீக மீஸான் கற்கள் காணக்கிடக்கின்றன. சிலகற்கள் பூமியில் புதைந்தும், சில உடைந்தும் கிடக்கின்றன. பலவற்றில் பெயர்களும் வருடங்களும் சரியாக புரிய முடியவில்லை. மகான் ரசீதுத்தீன் மன்னான் ஹிஜ்ரி 502-யில் மரணமாகி அடங்கியுள்ளார்கள் என்பதை அவர்களின் கல்லறை கல் மூலம் அறிய முடிகிறது இதற்குமேல் இவர்களைப் பற்றியக் குறிப்புகள் எதுவும் கிடைக்கவில்லை. கி. பி. 843-ல் இப்பள்ளியை கட்டிய முஹம்மது கல்ஜி என்ற பெரியாரும் மற்றும் அவர்கள் காலத்து நாதாக்களும் இப்பள்ளியின் மையவாடியில் தான் அடங்கியிருக்கிறார்கள் என்று நாதாக்கள் கூறுகிறார்கள். அந்த காலத்தில் இப்பள்ளியைக் கட்டிய மகான்களுக்கு கந்தூரி விழாவும் சிறப்பாக கொண்டாடப்பட்டது என்பதையும் அறிகிறோம். கி. பி. 1329-ல் இப்பள்ளியைப் புதுப்பித்து பிரமாண்டமாக கட்டிய பின், ஏற்கனவே நடந்துவந்த, இப்பள்ளியை ஆதியில் கட்டியவர்களின் நினைவு விழா விடுபட்டிருக்கலாமென்பது வரலாற்று ஆசிரியர்களின்

கருத்து. அவர்களின் மீஸான்கற்களும் காலப்போக்கில் மண்ணில் புதைந்து இருக்கலாம் என்பது அறிஞர்களின் கருத்தாக தெரிகிறது. அப்துல் காதிர் என்ற நாமத்தை உடைய மூன்று லெப்பை அப்பா வலியுல்லாக்களும் இங்கு தான் அடங்கியிருக்கிறார்கள். மாதுளை மரத்திற்கு மழைபொழிய வைத்த லெப்பை அப்பா அவர்கள் பெரிய ஜும்ஆ பள்ளியின் தென்புற பகுதியில் அடங்கியுள்ளார்கள். லெப்பை அப்பா சகோதரர்கள் வடபுற மையவாடியில் அடங்கியுள்ளார்கள். இவர்கள் உயிரோடு இருக்கும் போதும், இறந்த போதும் ஆற்றிய அற்புதங்கள் பல. இரவில் இவர்கள் நடமாடுவதை ஆலிம்களில் சிலர் கண்டிருக்கிறார்கள். நான் சிறுவனாக இருக்கும் போது எங்கள் வீட்டில் நிகழ்ந்த ஓர் அற்புத காட்சியை என்னுடைய தாய்வழி பாட்டி அவர்கள் சொன்னார்கள். தலைவாசல் கதவை மறந்து பூட்டாமல் படுத்ததாகவும் லெப்பை அப்பா அவர்கள் அந்த இரவு எங்கள் வீட்டிற்கு வந்து கதவைத் தட்டி தலைவாசல் திறந்து இருக்கிறது தாழ்ப்பாள் போட்டுவிட்டு படுங்கள் என்று சொன்னதாக சொன்னார்கள். என் தாய்வழிபாட்டி அவர்கள் இறைபக்தி நிறைந்தவர்கள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரம்பரையில் உதித்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அருணகிரிநாதரின் திருப்புகழுக்கு மறு புகழாக நபிகள் நாயகம் திருப்புகழ்பாடிப் பெரும்புகழ் படைத்த காசிம் புலவர் வலியும் இங்குதான் அடங்கியுள்ளார்கள். பகீஹ் சுலைமான் ஒலியுல்லாஹ் அவர்களும் இங்கு அடங்கியுள்ளார்கள். இவர்கள் காலஞ்சென்று நாற்பது ஆண்டுகள் கழித்து இவர்களின் உறவினர் ஒருவரை நல்லடக்கஞ் செய்ய குழிதோண்டியபோது இவர்களின் உடல் இப்போது அடக்கம் செய்த மையத் போன்று இருந்தது. முகத்தில் வியர்வை கசிந்து கொண்டிருந்தது

என்று பெரியார்கள் கூறியிருக்கிறார்கள். பல வலிமை வாய்ந்த இறைநேசச்செல்வர்களும், கல்விமான்களும், பெரியார்களும் இங்கு அடங்கியுள்ளார்கள்.

### 3. காட்டு மகுதூம் வலியுல்லாஹ் :-

(மரணம் ஹிஜ்ரி-539 கி.பி. 1133)

மகுதூம் வலியுல்லாஹ் அவர்கள் ஹிஜ்ரி 446-ல் அரபு நாட்டில் ஹாஷிம் (ரலி) அவர்கள் வம்சத்தில் பிறந்தார்கள். மகான் ஏர்வாடி செய்யிது இப்ராஹீம் வலியுல்லாஹ் அவர்களின் தந்தையும், மகுதூம் வலியுல்லாஹ் அவர்களும் சகோதரர்கள். மகுதூம் வலியுல்லாஹ் அவர்களின் தந்தை அரபு நாட்டில் இஸ்லாமிய மார்க்க பெரியாராகவும் அரசியல் தலைவர்களில் ஒருவருமாக விளங்கியதால் அரபுநாட்டுமக்கள் இவர்கள் மீது நிறைந்த அன்பையும் நம்பிக்கையும் வைத்திருந்தார்கள். அக்காலத்தில் நடைபெற்ற மார்க்க போர்களில் பங்கெடுத்து தொண்டாற்றியதன் மூலம் இவர்களின் புகழ் மென்மேலும் உயர்ந்தது. மகுதூம் வலியுல்லாஹ் அவர்கள் இளமையில் தகுதியான ஆலிம்களிடம் இஸ்லாமிய கலைஞானத்தைச் சிறப்பான முறையில் கற்றார்கள். இளமையிலே இறைபக்தி, நல்லொழுக்கம், நற்குணம், வீரம், தியாகம், ஈகை, சாந்தம் போன்ற உயர்ந்த குணநலங்களைப் பெற்று மக்கா, மதீனா மக்களின் அன்பிற்கும் ஆதரவிற்கும் பாத்தியமாகி விட்டார்கள். சிறு வயதிலே தாய் தந்தையர்களிடம் மிகுந்த அன்புடனும், மரியாதையுடனும் நடந்து கொண்டார்கள். அவர்களின் கட்டளைகளை மீறியதில்லை. பெரியோர்களுக்கும் பணிவிடை செய்து அவர்களின் அன்பையும் பெற்றுள்ளார்கள். மாணவ பருவத்திலேயே நுண்ணிய அறிவும், பொதுநல சேவை செய்யும் பண்பும் பெற்றிருந்தார்கள். மக்கா, மதீனாவி

லுள்ள முக்கிய வீதிகளில் நின்று இஸ்லாமிய மார்க்கப் பிரச்சாரம் செய்து இஸ்லாமிய மக்களிடையே புத்துணர்ச்சியைப்புகட்டினார்கள். இத்தகைய செம்மல் நமது நாயகம் முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்களின் 17வது தலைமுறையில் தோன்றியவர் என்பது குறிப்பிடத்தக்கது.

மகுதூம் வலியுல்லாஹ் அவர்கள் அவர்களின் பாட்டனார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அன்பையும் ஆசியையும் பெறநாடி மஸ்ஜித் நபவ்வியில் பல நாட்கள் இறைவணக்கத்தில் இருந்தார்கள். ஒருநாள் இரவு ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், இவர்களின் கனவில் தோன்றி தென் இந்தியா சென்று தீன் முழக்கம் செய்ய உத்தரவிட்டார்கள். இதை செவிமடுத்த மகுதூம் வலியுல்லாஹ் அவர்கள் அளவிலா மகிழ்ச்சியடைந்தார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஆசியைப்பெற்று சில உறவினர்களுடனும் நண்பர்களுடனும் கப்பல் மார்க்கமாக செந்தமிழ் நாட்டிலுள்ள பாண்டிய நாட்டின் துறைமுகப்பட்டினமாகிய காயல்பட்டினம் வந்து சேர்ந்தார்கள். அக்கால பாண்டிய மன்னன் அவர்களை வரவேற்று மிகவும் கண்ணியப்படுத்தியதாக அறிகிறோம். அவர்கள் வந்தபோது காயல்பட்டினம் சிறந்த துறைமுகப் பட்டினமாகவும், இங்குள்ள முஸ்லிம் மக்கள் மார்க்க ஞானமுள்ளவர்களாகவும், சிறந்த வணிகர்களாகவும் திகழ்ந்திருந்தார்கள் என்பதையும் அறிகிறோம். மகுதூம் வலி அவர்களின் இயற்பெயர் முஹம்மது. தாயார் பெயர் மகுதூம் அலி பாத்திமா என்ற செய்யிது அலிபாத்திமா. இவர்களின் தாயார் பெயரைக் கொண்டு இவர்களின் தர்காவை மஹ்தூம்பள்ளி தர்ஹா என்று அழைக்கிறார்கள். இவர்கள் தமிழகத்தின் பல பகுதிகளிலும் சன்மார்க்க பிரச்சாரம் செய்து இஸ்லாமிய சேவைகள் செய்

துள்ளார்கள். பல்லாண்டுகாலம் காயல்பட்டினத்தில் திருமறைபோதித்தும் இருக்கிறார்கள். இவர்களின் பெயரும் புகழும் தமிழகமெங்கும் பரவத்துவங்கியது. இஸ்லாமிய மார்க்கத்தில் பலரும் சேர்ந்தார்கள். பாண்டிய மன்னனுக்கு இவர்கள் மீது பொறுமையும் கோபமும் ஏற்பட்டது. ஹிஜ்ரி 539ல் ஏற்பட்ட மார்க்க போரில் உயிர்தியாகம் செய்து காயல்பட்டினம் காட்டு மகுதூம் பள்ளியில் அடங்கியுள்ளார்கள். இப்போரில் இறந்த மற்ற ஷுஹதாக்களும் இவர்களுக்கு பக்கத்தில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார்கள். சிலர் கடலோரமாகவும் அடங்கப்பட்டிருக்கிறார்கள்.

மகுதூம் வலி அவர்கள் ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி ரலி) (ஹிஜ்ரி 458-505), கௌதுல் அஃலம் முஹியித்தீன் அப்துல் காதிர் ஜெய்லானி (ரலி) (ஹிஜ்ரி 470-561) ஆகிய மாபெரும் மேதைகளின் காலத்தைச் சேர்ந்தவர்கள். இங்குள்ள கல்வெட்டு ஒன்றின் மூலம் காயல்பட்டினம் காட்டு மகுதூம் பள்ளிக்கு உதயமார்த்தாண்டம் பெரியபள்ளி என்னும் இப்பகுதிக்கு சோனாடு கொண்டான் பட்டினம் என்ற பெயரும் இருந்ததாக தெரிகிறது. காஸிம் புலவர் வலியுல்லாஹ் திருபுகழ்பாடும்போது நபிகள் நாயகம் (ஸல்) இவர்களுக்குக் காட்சியளித்து செய்யுளுக்கு அடியெடுத்து கொடுத்தது இப்பெருமைக்குரிய காட்டு மகுதூம் பள்ளியில் உள்ள குளத்தில். எனவே இக்குளமும் புகழ் பெற்று திகழ்கிறது. மகுதூம் வலி அவர்களின் சகோதரர் மகன் ஏர்வாடி ஷஹீது செய்யிது இப்றுஹீம் வலி அவர்கள் தென்னகம் வந்தபோது கண்ணனூரிலிருந்து நேரடியாக காயல்பட்டினம் வந்து தங்கினார்கள். திருநெல்வேலியை ஆண்ட குலசேகரன் என்ற கோபாண்டியன் இவர்களை காயல்பட்டினத்தில் வைத்து சந்தித்து இவர்கள் இங்கு தங்க எல்லா ஏற்பாடு

களையும் செய்து கொடுத்தார். ஏர்வாடி செய்யிது இப்ருஹீம் வலி அவர்கள் காயல்பட்டினத்தில் இருந்த காலத்தில் தங்கள் தகப்பனாரின் சகோதரர் காட்டு மகுதூம் வலியுல்லாஹ் அவர்களின் ஜியாரத்திற்கு அடிக்கடி வந்து போவார்கள்.

காட்டு மகுதூம் வலியுல்லாஹ் அவர்கள் அற்புதங்கள் பல செய்துள்ளார்கள். இன்றும் இவர்கள் தர்ஹாவில் டாக்டர்களால் கைவிடப்பட்ட நோயாளிகளும், வஞ்சனை, சூனியம் பேய் பிடித்தவர்களும் தங்கி, இப்பெரிய நாதாவின் துஆவினாலும், அல்லாஹ்வின் அருளாலும் சுகம் பெற்றுச் செல்கிறார்கள். எல்லா நபிமார்களும், ரசூல்மார்களும், பல முஃஜிஸாக்களை செய்துள்ளார்கள். முஹம்மது நபி (ஸல்) அலைஹிவஸல்லம் அவர்கள் பல ஆயிரக்கணக்ககான முஃஜிஸாக்களை (பெரிய அற்புதங்கள்) செய்துள்ளார்கள். அல்லாஹ்வின் அருள்நேச செல்வர்களுக்கு கராமத் (அற்புதம்) செய்யும் ஆற்றலுண்டு என்பதற்காக திருகுர்ஆனிலும், ஹதீதிலும் ஆதாரங்கள் இருக்கின்றன. அல்லாஹ்வினால் அருளப்பட்ட கராமத் என்னும் அற்புதம் நிகழ்த்தும் ஆற்றலை வலிமார்கள் மறைத்து வைக்கலாம், வெளிப்படுத்தவும் செய்யலாம்.

4. கலீபா அப்பா :- (மரணம் ஹிஜ்ரி 595கி.பி. 1198)

கலீபா அப்பா அவர்களின் பயணம் மஸ்ஜித் நபவியில் தொடங்கி, கஃபத்துல்லாஹ்வை வலம் வந்த பின் ஹிஜ்ரி 582ஆம் ஆண்டு ஜித்தாவிலிருந்து கப்பல் மார்க்கமாக ஏர்வாடி செய்யிது இப்றாஹீம் வலியுல்லாஹ் தலைமையில் கேரளாவிலுள்ள கண்ணனூர் வந்தடைந்தார்கள். கன்னனூர் மன்னன் இவர்களை முகமலர்ச்சியுடன் வரவேற்று எல்லா வசதிகளையும் செய்து

கொடுத்தான். சில நாட்கள் தங்கி இஸ்லாமிய பிரச்சாரங்களைச் செய்துவிட்டு தங்கள் படையுடன் கொச்சி கொல்லம் வழியாக குலசேகர பாண்டியன் ஆட்சிபுரிந்த திருநெல்வேலியிலுள்ள காயல்பட்டினம் என்னும் நகரை வந்தடைந்தார்கள். கோப்பாண்டியன் என்ற குலசேகரன் பாண்டியன் இப்றாஹிம் வலியுல்லாஹ், கலீபா வலியுல்லாஹ், பள்ளுல்லாஹ் வலியுல்லாஹ் போன்ற நாதாக்களுக்கு மிகவும் மரியாதைச் செலுத்தி அவர்கள் எல்லோர்களும் காயல்பட்டினத்தில் தங்க எல்லா ஏற்பாடுகளும் செய்து கொடுத்தான். மன்னனுக்கு இவர்களின் உதவி கொண்டு தன்னுடைய சகோதரர் திருபாண்டியனை வீழ்த்த வேண்டுமென்ற நோக்கம். ஏர்வாடி செய்யிது இப்றாஹீம் வலியுல்லாஹ் அவர்கள் கலீபா அப்பா அவர்களை பாண்டிய நாட்டிலுள்ள திருநெல்வேலி பகுதிக்கு கலீபாவாக நியமித்தார்கள். கலீபா அப்பா அவர்கள் சிறந்த மார்க்கமேதை; உயர்ந்த தவசீலர். கனிந்த உள்ளமும், இரக்க சிந்தனையும் உள்ளவர். இவர்களை மக்கள் கல்பு அப்பா என்றும் அழைத்து இருக்கிறார்கள். மார்க்க சம்பந்தமான தீர்ப்புகளுக்கு மக்கள் இவர்களையே நாடி வந்துள்ளார்கள். இவர்களுடன் வந்த பெரிய சேனை வீரர்கள் காயல்பட்டினம் கடற்கரைப் பகுதியில் கூடாரங்களை அமைத்து தங்கினார்கள். அவர்கள் தங்கிய இடம் இப்போதைய புகாரி சரீப் பகுதியிலிருந்து கோசுமறைப்பள்ளி பகுதிவரைவுள்ள இடம். ஏர்வாடி செய்யிது இப்றாஹீம் அவர்கள் தலைமயினாலான பிரச்சாரக் குழு திருநெல்வேலியிலுள்ள பல ஊர்களிலும் இஸ்லாமிய ஒளியைச் செவ்வனே பரப்பினார்கள். மதுரையை ஆண்ட திருப்பாண்டியன் ஏர்வாடி செய்யிது இப்றாஹீம் வலி அவர்கள் இஸ்லாமிய பிரச்சாரம் செய்ய கேட்ட அனுமதியை மறுக்கவே, இவர்கள் காயல்பட்டினத்தில் இருந்த வீரர்,

களில் 10000 பேர்களை அழைத்துக் கொண்டு மதுரையைப் பிடிக்க சென்றார்கள். அக்காலத்தில் காயல்பட்டினத்தில் இவர்கள் படையில் 25000 வீரர்கள் இருந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். மற்ற வீரர்கள் பள்ளுல்லா அப்பா அவர்கள் தலைமையில் காயல்பட்டினத்தில் இருந்தார்கள். ஏர்வாடி செய்யிது இப்றாஹீம் வலி அவர்களின் படை மதுரையைக் கைப்பற்றியது. திருப்பாண்டியன் போரில் தோற்று திருப்பதிக்கு ஓடிவிட்டான். ஏர்வாடி செய்யிது இப்றாஹீம் வலியுல்லா அவர்கள் ஆட்சி மதுரையில் சிறப்பாக நடைபெற்றது. கலீபா அப்பா அவர்களின் நிர்வாகம் பாண்டிய நாட்டின் திருநெல்வேலி பகுதியில் அருமையான முறையில் நடந்தேறியது. அக்காலத்தில் திருநெல்வேலியின் ஆட்சி பொறுப்பு, காயல்பட்டினத்திலிருந்தது என்பதை அறிகிறோம். கலீபா அப்பா அவர்களின் மரணம் ஹிஜ்ரி 590 என்றும் ஹிஜ்ரி 595 என்றும் சொல்லப்படுகிறது. இவர்களின் காலத்தில் வட இந்தியாவிலுள்ள அஜ்மீரில் குத்புல் ஹிந்த் காஜா முயினுத்தீன் ஜிஷ்தி (ரலி) அவர்களின் மார்க்கப் பிரச்சாரத்தால் பல ஆயிரக்கணக்கானவர்கள் இஸ்லாத்தில் இணைந்தார்கள். அக்காலத்தில் தென் இந்தியாவிலும் வட இந்தியாவிலும் இஸ்லாமிய பிரச்சாரம் இறைநேச செல்வர்களால் தீவிரமாக செய்யப்பட்டது என்பதை அறிகிறோம். கலீபா அப்பா அவர்களின் அடக்கஸ்தலம் காயல்பட்டினம் கீழ நெய்னார் தெருவிலிருக்கிறது.

## 5. ஈக்கி அப்பா என்ற பள்ளுல்லாஹ் வலி :-

**(மரணம் ஹிஜ்ரி 595 கி. பி. 1198)**

ஈக்கி அப்பா அவர்கள் ஹிஜ்ரி 582-ல் கலீபா அப்பா, செய்யிது இப்றாஹீம் வலியுல்லாஹ் ஆகிய நாதாக்களுடன் அரபு நாட்டிலிருந்து காயல்பட்டினம் வந்து தங்கி

னார்கள். செய்யிது இப்றாஹீம் வலி அவர்கள் இவர்களை பாண்டிய நாட்டின் திருநெல்வேலி பகுதிக்கு தங்களின் படை தளபதியாக நியமித்தார்கள். அரபுபடையில் ஒரு பகுதியை இவர்களிடம் ஒப்படைத்து விட்டு அவர்கள் மதுரைக்கு சென்றுவிட்டார்கள். ஈக்கி அப்பா அவர்கள் சிறந்த போர்வீரராகவும், வலிமை வாய்ந்த இறைநேச செல்வராகவும் திகழ்ந்துள்ளார்கள். சோழ மன்னனின் கடற்படை பாண்டிய நாட்டை தாக்கிய போது கடற்படை கரைச்சேரா வண்ணம் காத்து நின்றார்கள். இவர்களின் படை மிகவும் பலம்வாய்ந்தது. இத்தவசீலர் ஈக்குகளை அம்புகளாக பயன்படுத்தி சோழமன்னரின் படையை விரட்டியடித்திருக்கிறார்கள். இதனால் இவர்களுக்கு ஈக்கி அப்பா என்ற பெயரும் துலங்கிவிட்டது. அந்நிய கடற்படைகள் கரைவந்து சேராவண்ணம் ஆழமாக இருந்த கடலோரப் பகுதியை ஒரு பிடி மண்ணைவீசி மேடாக்கிவிட்டார்கள். இதனல் இன்றும் காயல்பட்டினம் முதல் மணப்பாடு வரை கடலில் திட்டுகளைக் காணலாம், இவர்கள் தங்களின் தவ வலிமையால் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள்.

குலசேகரபாண்டியன் என்ற கோபாண்டியன் இராமநாதபுரத்தை ஆட்சி செலுத்துகின்றதன்னுடைய சகோதரன் விக்ரம பாண்டியனையும் சேர்த்துகொண்டு மதுரையை ஆட்சி செலுத்தும் செய்யிது இப்றாஹீம் வலி அவர்களிடமிருந்து மதுரையை மீட்க படை எடுத்துச்சென்றார். இதே நேரத்தில் சோழமன்னனும் மதுரையைத் தாக்க ஆரம்பித்துவிட்டார். இந்த திடீர்ப் படையெடுப்பால் ஏற்பட்ட நெருக்கடியைச் சமாளிக்க காயல்பட்டினத்திலுள்ள தளபதி பள்ளுல்லாஹ்வலி அவர்களுக்கு தூதுவர்களை அனுப்பி அங்குள்ள 15000 அரபு

படைவீரர்களையும் மதுரைக்கு அனுப்பி மதுரையைச் சுற்றி பலத்த பாதுகாப்பிற்கு ஏற்பாடு செய்தார்கள். பள்ளுல்லா வலி அவர்களின் சிறந்த யுத்த பயிற்சி இந்த அரபி படைவீரர்களைப் பத்து நாட்கள் போரில் தீவிர மாக போராடி வெற்றிக் கொடியை ஏற்ற உறுதுணை யாக அமைந்தது. வெற்றியின் காரணமாக இராம நாதபுர பகுதி முழுவதும் செய்யிது இப்ராஹீம் வலி அவர்களின் கைவசம் வந்தது. ஏர்வாடியை தங்களின் சிறப்பு நகரமாக வைத்துக் கொண்டார்கள். தேவை யான போர் வீரர்களையும், அறிஞர்களையும் வைத்து விட்டு மற்றவர்களைக் காயல்பட்டினம் அழைத்து வந்து பள்ளுல்லா வலி கலீபா வலி ஆகியோர்களின் ஆசியைப் பெற்று காயல் துறைமுகத்திலிருந்து மதினா நகருக்கு கப்பல் மார்க்கமாக அனுப்பி வைத்துவிட்டு. அவர்கள் ஏர்வாடிக்குச் சென்று விட்டார்கள் மதுரை. இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய மூன்று ஜில்லாக் களிலும் ஏர்வாடி செய்யிது இப்றாஹீம வலியுல்லாஹ் அவர்களின் ஆட்சி செம்மையாக நடந்தது. பாண்டிய நாட்டின் திருநெல்வேலி பகுதியின் முழு நிர்வாக பொறுப்பையும் பள்ளுல்லாவலி அவர்களும், கலீபா வலி அவர்களும், கவனித்துக் கொண்டார்கள். இவர்கள் காலத்தில் காயல்பட்டினம் மக்கள் பல தெருக்களை அமைத்து செழிப்புடனும், மகிழ்வுடனும் வாழ்ந்தார் கள் என்பதை அறிகிறோம். ஹிஜ்ரி 595-யில் திருப்பதி சென்ற திருபாண்டியன் வடநாட்டு படைகளையும் சேர்த்துக்கொண்டுவந்து மதுரையை திடீரென்று தாக்கி யதால் போரில் இப்றாஹீம் வலியுல்லாஹ் ஷஹீதா னார்கள். திருபாண்டியனும் அவர்களின் ஈட்டி பாய்ந்து மாண்டான். இதே நேரத்தில் பாண்டிய நாட்டின் திரு நெல்வேலி பகுதியிலும் யுத்தம் நடைபெற்றது. அந்த யுத்தத்தில் கலீபா வலி அவர்களும் ஷஹீதானார்கள்

என அறிகிறோம். பள்ளுல்லா வலி அவர்கள் அடக்கஸ் தலம் காயல்பட்டினம் முத்துவாப்பாதைக்கா தெரு விலிருக்கிறது.

## 6. செய்கு மாஃபர் சுல்தான்
## (மரணம் ஹிஜ்ரி 628- கி. பி. 1231)

இவர்கள் சிறந்த அரசராகவும் அல்லாஹ்வின் நல்லடியாராகவும் வாழ்ந்துள்ளார்கள். இவர்கள் மாஃபர் தேசத்தின் மன்னர். யாக்கூத் இப்னு அப்துல்லாஹ் என்ற சிறந்த நிலநூல் வல்லுனர் மாஃபர் என்பது இந்தியாவின் கிழக்குக் கடற்கரையைக் குறிக்கும் என்று தன்னுடைய பூகோள அகராதியில் எழுதியுள்ளார். கன்னியாகுமரியிலிருந்து தூத்துக்குடி வரையுள்ள கடற்கரைப் பகுதிக்கு மாஃபர் என்றும் சிலர் கன்னிகுமரியிலிருந்து சென்னை வரையிலுள்ள கடற்கரை பகுதியைக் குறிக்கும் என்றும் கூறுகிறார்கள். அரபிகள் இந்தியாவின் மேற்கு கடற்கரைப் பகுதியை மலபார் என்றும் கிழக்கு கடற்கரைப்பகுதியை மாஃபர் என்றும் அழைத்திருக்கிறார்கள். செய்கு மாஃபர் சீர்மிகு காயல் பட்டினத்தை தன் தலைநகராக கொண்டு மாஃபர் பகுதியை ஆண்ட சிறந்த மன்னராக தெரிகிறது. இவர்கள் காலத்தில் இஸ்லாம் காயல்பட்டினத்திலும் மற்றும் திருநெல்வேலியின் பலபகுதிகளிலும் பரவியிருந்தது. செய்கு மாஃபர் அவர்களுக்கு முன் காயல்பட்டினத்தை நிர்வகித்த பள்ளுல்லாஹ் வலி, கலீபா வலி ஆகியோர்களின் முயற்சியால் தான் இஸ்லாமிய பிரச்சாரம் பாண்டிய நாட்டின் திருநெல்வேலி பகுதியில் நடந்தது. அதன் பயனாக இஸ்லாமிய ஆட்சி இப்பகுதியில் ஏற்படாதுவாக இருந்தது.

செய்கு மாஃபர் அவர்களின் மரணம் ஹிஜ்ரி 628. இவர்களின் அடக்கஸ்தலம் காயல்பட்டினம் பஞ்சாயத்து

போர்டு கட்டிடத்திலிருந்து கோமான் தெருவிற்கு செல்லும் வழியில் இருக்கிறது. காயல்பட்டினம் மஹ்லறா அரபிக்கல்லூரியின் முன்னாள் முதல்வர் அல்ஹாஜ் கத்தீபு. S. N. சாகிப் தம்பி ஆலிம், மஹ்லறா அரபிக் கல்லூரியின் பேராசிரியர் S. M. H. சைபுத்தீன் ஆலிம், ஆகியோர்களின் வீடுகளுக்கு அண்மையில் இம்மாபெரும் மன்னரின் கல்லறை இருக்கிறது. இவர்கள் சிறந்த மன்னராகவும், மகானுமாக இருந்துள்ளார்கள்.

## 7. ஷஹீது செய்யிது அஹ்மது வலி

(மரணம் ஹிஜ்ரி 670, கி. பி. 1272)

இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிக்கழகம் சமர்ப்பணம் செய்த சான்றுரையில் (Department of Archaeology Annual Report of Indian Epigraphy for 1949-1950) காயல்பட்டினம் சிறுபள்ளியில் அடங்கியிருக்கும் ஷஹீது செய்யிது அஹ்மது அவர்களின் மரணம் ஹிஜ்ரி 670 (கி. பி. 1272) என்பதை மீஸான் கற்களின் குறிப்பிலிருந்து எடுத்து தந்துள்ளார்கள். ஷஹீது செய்யிது அஹ்மது வலி அவர்களுக்கு பக்கத்தில் சில இறைநேச செல்வர்களும், இறைநேச செல்விகளும் அடங்கியுள்ளார்கள். இவர்களின் அடக்கஸ்தலம் பள்ளியின் உள் பகுதியில் அமைந்து விட்டதனால், மீஸான் கற்களிலுள்ள குறிப்புகள் எல்லாம் தெள்ளத்தெளிவாக இன்றும் இருக்கிறது. 1950ம் வருடத்திற்கு முன்பே தொல் பொருள் ஆராய்ச்சி கழகத்தை அணுகி அவர்களை ஊருக்கு வரவழைத்து குறிப்புகள் எடுக்க ஏற்பாடு செய்தவர்களைப் பாராட்டுவது அவசியம். சிறுபள்ளி சுமார் 740 வருடங்களுக்கு முன் சிறிய பள்ளியாக கட்டப்பட்டது. சுமார் 360 வருடங்களுக்கு முன்

ஆட்சியிலிருந்த நெய்னார் ஒருவர் இப்பள்ளியை பெரியதாகக் கட்டி ஜும்ஆ பள்ளியாக மாற்றி அமைத்தார் என்று சொல்லப்படுகிறது. பெரிய ஜும்ஆ பள்ளியும் சின்ன ஜும்ஆ பள்ளியும் நெய்னார் தெருவில் தான் அமைந்து இருக்கின்றன. சென்ற 360 வருடங்களாக பெரிய ஜும்ஆ பள்ளியில் ஒரு வாரமும், சின்ன ஜும்ஆ பள்ளியில் மறு வாரமும் ஜும்ஆ தொழுகை நடந்து வருகிறது என்பதை அறிகிறோம்.

ஷஹீது செய்யிது அஹ்மது வலியுல்லாஹ் காயல் பட்டினத்திலே பல ஆண்டுகள் வாழ்ந்து, மார்க்கக் கல்வியைப் போதித்து மறைந்துள்ளார்கள். இவர்கள் அல்லாஹ்வின் நல்ல அடியாராகவும், ஞானியாகவும் திகழ்ந்துள்ளார்கள். ஷஹீது செய்யிது அஹ்மது வலியுல்லாஹ் அவர்களுக்குப் பக்கத்தில் அடங்கியுள்ள நாதாக்களின் விபரம், செய்கு ஹசன் ஷஹீது. அவர்களின் மரணம் ஹிஜ்ரி 794. அஹ்மது நாச்சி அவர்களின் மரணம் ஹிஜ்ரி 806. மௌலானா சித்தீக் அவர்களின் மரணம் ஹிஜ்ரி 812. அப்துல் மலிக் அவர்களின் மரணம் ஹிஜ்ரி 812. பீவிமறியம் அவர்களின் மரணம் ஹிஜ்ரி 822. செய்கு அபுபக்கர் அவர்களின் மரணம் 853. இந்த இறைநேச செல்வர்கள், இறைநேச செல்விகளின் வரலாற்று குறிப்புகள் கிடைக்கவில்லை. இவர்கள் அடங்கியிருக்கும் சிறுபள்ளி பழுது பட்டு விட்டதனால் இப்போது உடைக்கப்பட்டு பெரிய அளவில் நவீன முறையில் பள்ளிவாசல் கட்டப்பட்டு வருகிறது.

**8. ஷெய்கு சலாஹுத்தீன் வலி:**
**(மரணம் ஹிஜ்ரி 818 கி. பி. 1415)**

இவர்களும் இவர்களுடைய சகோதரர்களும் செய்ரோவிலிருந்து காயல்பட்டினம் வந்தவர்கள். இவர்கள்

சிறந்த பக்திமானாகவும், இறைநேச செல்வர்களாகவும் வாழ்ந்துள்ளார்கள். இவர்கள் வாழ்ந்த காலத்தில் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள். மறைவுக்குப் பின்னும் அற்புதங்களை நிகழ்த்திக்கொண்டிருக்கிறார்கள். அடக்கவிடத்தை விட்டு வெளியே வந்து உலாவி திரியும் ஆற்றலுடையவர்களுக்கு 'தஸர்ருபாத்' என்று சொல்லப்படும். இவர்கள் இத்தகைய ஆற்றல் பெற்ற மகான் என்று இவ்வூர் பெரியோர்கள்சொல்லுகிறார்கள், கட்டபொம்மன், காயல்பட்டினம் முஸ்லிம்களிடம் தனக்கு கப்பம் கட்டுமாறு உத்தரவிட்டான். காயல் பட்டினம் மக்கள் மறுக்கவே, அவர் படையுடன் வந்து காயல்பட்டினம் அருகில் தங்கினார். இதை அறிந்த ஷெய்கு சலாஹுத்தீன் வலியுல்லாஹ், இரவில் அவர்கள் முன் தோன்றி தளபதிகள் சிலரை வெட்டினார்கள். இதைக்கண்ட படையினர்கள் பயந்து ஓடிவிட்டார்கள் என்று பெரியவர்கள் சொல்ல கேள்விபட்டிருக்கிறோம். இலங்கையில், எருக்கலம்பிட்டியில் கலவரம் நடந்த போது ஜும்ஆ பள்ளியை இராணுவத்தினர் சூழ்ந்து மக்களை வெளியே செல்லாமல் தடுத்தனர். மக்கள் திகைத்து நின்ற சமயம் ஒரு பெரியார் குதிரை மீது வந்து இராணுவத்தினரை விரட்டி அடித்து முஸ்லிம்களைக் காப்பாற்றினார். ஒருவர் இவர்களை யார் என்று கேட்டபோது காயல்பட்டினம் ஷெய்கு சலாஹுத்தீன் என்று கூறினார்கள். அவ்வூர் மக்களில் சிலர் காயல்பட்டினம் வந்து இம்மகானை தரிசித்துச் சென்றார்கள். இவர்கள் அடங்கியிருக்கும் 'பள்ளியும்' இவர்களின் பெயரால் சலாஹுத்தீன் பள்ளி என்று அழைக்கப்படுகிறது. இப்பள்ளியில் சுவர்க்கத்துப் பெண் என்ற ஓர் இறைநேச செல்வியும் அடங்கியுள்ளார்கள். இவர்களின் சகோதரர்களின் ஒருவரான செய்கு ஹுசைன் வலி அவர்கள் ஐக்கிய விளையாட்டு திடலுக்குப் பக்கத்

தில் அமைந்துள்ள ஷெய்கு ஹுஸைன் பள்ளியில் அடங்கியுள்ளார்கள். மற்றொரு சகோதரரான ஜாபர் சாதிக் வலி அவர்கள் பெரிய நெசவுத் தெருவில் அடங்கியுள்ளார்கள். இவர்கள் அடங்கியுள்ள பகுதி ஊரின் முக்கிய பஜாராக இன்று இருக்கிறது. இம்மூன்று சகோதரர்களும் வலிமை வாய்ந்த வலிமார்களாக வாழ்ந்துள்ளார்கள். ஷெய்கு சலாஹுத்தீன் வலி அவர்கள் ஹிஜ்ரி 818 மரணமாகி மேலப்பள்ளி என்ற சலாஹுத்தீன் பள்ளியில் அடங்கியுள்ளார்கள். இம்மூன்று மகான்களின் கந்தூரி வைபவம் ஒவ்வொரு ஆண்டும் நடைபெற்று வருகிறது.

## 9. அபூபக்கர் வலியுல்லாஹ்

[மரணம் ஹிஜ்ரி 847 கி. பி. 1443]

அபூபக்கர் வலியுல்லாஹ் அவர்கள் முஹியித்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளிக்கு அருகிலுள்ள கற்புடையார் பள்ளியில் அடங்கியுள்ளார்கள். இப்பள்ளி காயல்பட்டினத்திலுள்ள மிகவும் பழமையான பள்ளி வாயில்களில் ஒன்று. இப்பகுதிக்கு அக்காலத்தில் கற்புடையார் வட்டம் என்று பெயர். அக்காலத்தில் இப்பகுதியில் குடியிருப்புகள் ஏராளமாகஇருந்தனஎன்பதை ஏடுகள் மூலமும் பெரியவர்கள் வாயிலாகவும் அறிகிறோம். இப்பள்ளியில் சில சரித்திர சம்பந்தமான கல்வெட்டுகள் இருக்கின்றன. இப்பள்ளியிலுள்ள கருங்கல் கல்வெட்டு ஒன்றில் பவித்திர மாணிக்கப்பட்டினம் என்ற காயல்பட்டினம் என்று பொறிக்கப்பட்டிருந்தது. கடற்கரைப்பள்ளிக்கும் கற்புடையார் பள்ளிக்கும் இடையிலுள்ள தூரம் இரண்டு பர்லாங் தான். இப்பகுதிதான் காயலின் பூர்வீக பகுதி. இப்பகுதியில் பழமையான கல்லறைகள் பல இருக்கின்றன. இப்பகுதியில் பூமியை ஆழமாக தோண்டியபோது பழங்காலத்து சாமான்கள்

கிடைத்து இருக்கின்றன. கற்புடையார் பள்ளியின் அண்மையிலுள்ள குளமும் கீர்த்தி பெற்றவை. அபூபக்கர் வலியுல்லாஹ் அவர்கள் அல்லாஹ்வின் நல்லடியாராக வும் சீரிய தவச் சீலராகவும் மிளிர்ந்து இருக்கிறார்கள். இவர்களும் அடக்கஸ்தலத்திலிருந்து எழுந்துச் செல்லும் சக்தி பெற்றவராக திகழ்ந்து இருக்கிறார்கள். சில ஆண்டு களுக்கு முன் இப்பகுதி காட்டு பகுதியாக இருந்தது. அக்காலத்தில் இப்பகுதியில் இரவு நேரங்களில் சிரமத் தில் சிக்கியவர்களுக்கு வழிகாட்டி உதவியுள்ளார்கள் என்று நாதாக்கள் கூறியுள்ளார்கள். இம்மகான் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள். இவர்கள் இரவில் குதிரை மீது சவாரி செய்து சென்றதை சிலமுறை பார்த்ததாக ஒரு பெரியார் தெரிவித்துள்ளார். இவர்கள் கொல்லம் ஆண்டு 643 (ஹிஜ்ரி 847)இல் மரணமாகி அடங்கியுள்ளார்கள். இவர்களின் கந்தூரி வைபவம் ஒவ்வொரு ஆண்டும் சிறப்பாக நடைபெறுகிறது.

## 10. சாலார் மரைக்காயர் வலியுல்லாஹ்:
[ஹிஜ்ரி 848, கி. பி. 1444]

இம்மகான் இரட்டைக் குளத்துப் பள்ளியின் கிழக்கு வாயில் பகுதியில் அடங்கப்பட்டிருக்கிறார்கள். இப் பள்ளி காயல்பட்டினத்திலுள்ள பழமையான பள்ளி களில் ஒன்று. சரித்திர கீர்த்திப் பெற்ற பள்ளியில் பல இறைநேசச் செல்வர்கள் தியானத்திலிருந்து இருக்கிறார் கள். இப்பள்ளியின் வடபுறத்தில் ஓர் இறைநேசச் செல்வி அவர்களின் அடக்கஸ்தலம் இருக்கிறது. இதற்குப் பக்கத்தில் எல்லா வசதிகளுடன் கட்டப்பட்ட பெண்கள் தைக்கா ஒன்றிருக்கிறது. பெண்கள் தொழுவதற்கும் சிறுமிகள் ஓதுவதற்கும், படிப்பதற்கும் இத்தைக்காவை பயன்படுத்துகிறார்கள். இரட்டைக் குளத்துப் பள்ளிக்கு மீக்காயில் பள்ளி என்ற பெயரும் உண்டு. குத்துபு

ஸமான் சதக்கத்துல்லா அப்பா அவர்கள் இங்குதான் அதிகமாக தங்கி இபாதத் செய்துள்ளார்கள். இவர்கள் உறவினர், நண்பர்களின் வேண்டு கோளுக்கிணங்க காயல்பட்டினத்தில் ஏற்பட்ட மழையின்மையைப் போக்க, மீக்காயீல் (அலை) அவர்களிடம் வேண்டி மழை பொழிய வைத்தார்கள். இதனால் தான் இப் பள்ளிக்கு மீக்காயீல் பள்ளி என்ற பெயர் துவங்கியது. சாலார் மரைக்காயர் வலியுல்லாஹ் அவர்களின் சமாதியை ஒட்டி அக்காலத்தில் ஒரு பெரிய குளம் இருந்தது. அதில் மக்கள் குளிக்க, ஒளுவு செய்ய பயன்படுத்தி வந்தார்கள். அக்குளப்பகுதியில் பழைய காலத்து வாள்கள், கோப்பைகள் மற்றும் சாமான்கள் கண்டுபிடிக்கப்பட்டன. பல தேச பாதுகாப்பு, மார்க்க பாதுகாப்பு யுத்தங்கள் இரட்டைக்குளத்து பள்ளிக்கும், கோமான் தெரு பள்ளிக்கும் இடையில் நடந்தன. அதில் பலர் ஷஹீதாகியுள்ளார்கள். அபூபக்கர் வலியுல்லாஹ் போன்று மகான் சாலார் மரைக்காயர் வலியும் பல காரணங்கள் காட்டியிருக்கிறார்கள் என இப் பகுதி மக்கள் சொல்லுகிறார்கள்.

## 11. காழி அலாவுத்தீன் வலியுல்லாஹ் (மரணம் ஹிஜ்ரி 973: கி. பி. 1565.)

இவர்களின் முழுப்பெயர் செய்கு பாழில் செய்யிது முஹம்மது காழி அலாவுத்தீன். இவர்களின் தகப்பனார் பாட்டனார் எல்லாம் காயல்பட்டினத்திலேயே பிறந்து, காயல்பட்டினத்திலேயே அடங்கியுள்ளார்கள். இவர்களின் தகப்பனார் பெயர் செய்யிது அலாவுதீன். இவர்களின் இறப்பு ஹிஜ்ரி 937. செய்யிது அலாவுத்தீன் வலி அவர்களின் தந்தையார் பெயர் முஹம்மது செய்யிது மஹ்தூம். முஹம்மது சம்சுத்தீன் என்பது முழுப்பெயராகும். இவர்கள் எல்லோர்களும் முஹம்மது (ஸல்)

அலைஹிவஸல்லம் அவர்களின் சந்ததியினர்கள். ஹுஸைன் (ரலி) அவர்களின் 27-வது தலைமுறைப் பேரர். நம்முடைய காழி அலாவுத்தீன் அப்பா அவர்கள் சிறந்த வலியாகவும், குத்பாகவும் விளங்கியுள்ளார்கள். இவர்களும் இவர்களுடைய தகப்பனார் அவர்களும் காயல்பட்டினம், சதுக்கைத்தெருவிலுள்ள அஹ்மது நெய்னார் பள்ளியை ஒட்டிய காழி அலாவுத்தீன் தைக்காவில் அடங்கியுள்ளார்கள்.

ஆலிப்புலவர் காயல்பட்டினம் முஹம்மதப்பா மரபினரிடையே பெற்ற மிஃராஜ் கிதாபினை அன்றே காழி செய்யிது முஹம்மது அலாவுத்தீன் அப்பா அவர்கள் தமிழில் விளக்கம் செய்ய, இனிய தமிழ் காவியமாக்கினார்கள். ஆலிப்புலவர் அவர்கள், அப்பா அவர்களைப் பற்றியும், காயல்பட்டினத்தைப் பற்றியும் தம் நூலில் குறிப்பிடும் சில அடிகளை இங்கு குறிப்பிடுகிறேன்.

''களித்த-சிறை வண்டுலவக் கமலம் விள்ளுங்
காஹிரியில் வாழ் செய்கு முகம்மதின்பா
லளித்தவவு லாதிறகு லறிஞர் பீரா
மடல்மகுதூம் காழியலாவுத்தீன் பாற்''
(மிஃராஜ் மாலை-17)

''மருவளர் காஹிரி னாடுறு செய்குமு
கம்மத லாவுதினோ
ரருள்வளர் நந்நபி தம்மிகுறாஜை
யருந்தமிழ் செய்திடலால்''
(மிஃராஜ் மாலை 10)

ஆலிப்புலவர் அவர்கள் அவ்லாதிரசூல் காழி அலாவுத்தீன் அப்பாவைப் பற்றி குறிப்பிடும் போது, ''வேதம் ஓதிய கிராஅத் ஏழுடன் மிக்கதான தஃப்ஸீருக்கும் நாதமேவிய சொல் நஹ்வுஸர்ஃபுடன் நல்ல

இல்மு பதினாலுக்கும், சீதமேவிய சொல் இலக்கணம் செப்பிடும் பதினெண் பாடைக்கும், போதவல்ல மது ரம் அலாவுத்தீனைப் போற்ற நல்லறிவு பொங்குமே'' என்று புலமை எடுத்துக்காட்டாகும். காழிஅலாவுத் தீன் வலி அவர்கள் மாட்சியமை வாய்ந்த ஆலிமாகவும், நேர்மைவாய்ந்த நீதிமானாகவும் வாழ்ந்தார்கள். அவர் கள் காழியாக இருக்கும்போது காயல்பட்டினத்தில் பல சீர்திருத்தங்களைச் செய்துள்ளார்கள். குறிப்பாக ஒரு நாள் அப்பா அவர்கள் கடற்கரையோரமாக நடக்கும் போது ஒரு நிறைசூலியான பெண்மணி கடலோரமாக ஊற்றுத்தோண்டி சிரமப்பட்டு தண்ணீர் எடுப்பதைப் பார்த்து ஏன் பிரசவ வேதனை ஏற்படக்கூடிய நேரத் தில் தண்ணீர் எடுக்க வந்தாய் என்று கேட்டபோது, ''என் மாமியார் வற்புறுத்தினார், வேறு வழியின்றி வருத்தத்துடன் வந்தேன்'' என்று கூறினாள். அம் மாமியாரின் கொடுமை இவர்களின் மனதை பெருந்துன் பத்தில் ஆழ்த்தியது. அன்றுமுதல் ஊர்கூட்டத்தைக் கூட்டி மணமகன் தான் மனைவியின் வீட்டிற்குச் சென்று வாழ வேண்டுமென்ற சட்டத்தைக் கொண்டு வந்தார் கள். அன்றிலிருந்து காயல்பட்டினத்திலும், காயல் பட்டினம் மக்கள் குடியேறிய ஊர்களிலும் இவ்வழக்கம் பழக்கத்திற்கு வந்துள்ளது. இன்று இந்தப்பழக்கம் எந்த ஊர்களில் இருக்கிறதோ, அங்கெல்லாம் காயல் பட்டினம் மக்கள் காழிஅலாவுத்தீன் அப்பா அவர்களின் காலத்திற்குப்பின் குடியேறி இஸ்லாத்தைப் பரப்பி இருக்க வேண்டும், என்பது புலனாகிறது. அப்பா அவர்களும் மகான் செய்யிதினா சாஹுல் ஹமீது நாயக மும் ஒத்த வயதினர்கள்.

சாஹுல் ஹமீது நாயகம் அவர்கள் தமிழகத்தில் கால்வைத்த முதல் இடம் காயல்பட்டினம். அவர்கள் ஹஜ்ஜு கடமையை முடித்துக்கொண்டு ஜித்தா வழி

யாக கப்பல் மார்க்கமாக பொன்னானி வந்து, முஹல்லத் தீவு இலங்கை வழியாக சுமார் ஹிஜ்ரி 960ல் காயல் பட்டினம் வந்து சேர்ந்தார்கள். இக்காலத்தில் காயல் பட்டினத்தில் பல நாதாக்கள் வாழ்ந்து வந்தார்கள். இவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள், காழி அலாவுத்தீன் வலியுல்லாஹ், அப்துற்றசீத் வலியுல்லாஹ போன்ற மகான்கள் நுஸ்கி வலியுல்லாஹ், பெரிய சம்சுத்தீன் அப்பா, செய்யிது முஹம்மது வலியுல்லாஹ் சதக்கு நெய்னார் வலியுல்லாஹ் ஆகியோர்கள் சிறுவர்களாக வாலிப பருவமுடையவர்களாகவும் இருந்தார்கள். பின் காலத்தில் சுலைமான் வலியுல்லாஹ் அவர்களின் தந்தை சதக்கு நெய்னார் வலியுல்லாஹ் சாஹுல் ஹமீது நாயகம் அவர்களிடம் பைஅத் பெற்று, அவர்களின் சீடர்களில் ஒருவராக வாழ்ந்து அங்கே அடங்கப் பெற்றிருக்கிறார்கள். சாஹுல் ஹமீது நாயகம் அவர்கள் காயல் பட்டினத்தில் பல நாட்கள் தங்கிவிட்டு, இவ்வூரில் வலிமார்களும், குத்புமார்களும் தோன்றிக்கொண்டே இருப்பார்கள் என்று துஆ செய்துவிட்டு மேலப்பாளையம், தென்காசி, கீழக்கரை, திருச்சி வழியாக தஞ்சையிலுள்ள நாகூர் வந்து, அதையே தங்கள் இருப்பிடமாக ஆக்கி கொண்டார்கள்.

காழி அலாவுத்தீன் அப்பா அவர்கள் ஹிஜ்ரி 973-ல் இறப்பெய்தினார்கள். இவர்கள் அடங்கியிருக்கும் காழி அலாவுத்தீன் அப்பாதைக்காவில்மற்றும்பலநாதாக்களும் அடங்கியிருக்கிறார்கள். அப்துர்ரஷீத் இப்னு அப்துல் ஜைபிப் இப்னு அலாவுத்தீன். இப்பெரியாரும் காயல் பட்டினம் கொடிமர சிறுநெய்னார் பள்ளியை அமைத்தவர்களில் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களின் மரணம் ஹிஜ்ரி 971. இவர்களுக்கு அடுத்து அடங்கியிருப்பவர் செய்யிது முஹம்மது வலி இப்னு அலாவுத்தீன். இவர்கள்வபாத் ஹிஜ்ரி 924. இவர்களுக்கு

பக்கத்தில் காழி அலாவுத்தீன் அப்பா அவர்களும், அவர்களின் தகப்பனார் அவர்களும், அவர்களின் சகோதரி அவர்களும் அடங்கி இருக்கிறார்கள்.

காழி அலாவுத்தீன் அப்பா அவர்களின் மக்களும், பேரர்களும் காழியாக பதவி வகித்துள்ளார்கள். இவர்களின் பரம்பரையினர்களில் சிலர் மதுரையிலும் செல்வாக்குடன் இன்றும் வாழ்கின்றார்கள்.

## 12. செய்கு அப்துல்லா மரைக்காயர் வலி:-

*[மரணம் ஹிஜ்ரி 987 : கி. பி. 1579]*

இப்பெரியார் காயல்பட்டினம் கொடிமர சிறுநெய்னார் பள்ளியைக் கட்டியவர்களில் ஒருவர். இவர்கள் சிறந்த கட்டிடக்கலை நிபுணராக இருந்து இருக்கிறார்கள். அப்பள்ளியின் கட்டிட அமைப்பு எல்லாம் இவர்களே திட்டமிட்டு கொடுத்து, இவர்களும் பொறியியல் வல்லுனராக இருந்து கட்டிக் கொடுத்தார்கள் என்பதை அறிகிறோம். இப்பள்ளி சுமார் 460 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட பள்ளி என்பதை அறிகிறோம். செய்கு அப்துல்லா மரைக்காயர் வலி அவர்கள் ஹிஜ்ரி 987-ல் வபாத்தாகி, கொடிமர சிறு நெய்னார் பள்ளி மையவாடியில் அடங்கி இருக்கிறார்கள். இவர்களுடன் இப்பள்ளியை நிர்மாணிப்பதில் ஒத்துழைத்த மகான் அப்துர் ரஷீத் வலி அவர்கள் காழி அலாவுத்தீன் அப்பா தைக்காவில் அடங்கியிருக்கிறார்கள்.

## 13. நுஸ்கி வலியுல்லாஹ்:-

*[மரணம் ஹிஜ்ரி 995 : கி. பி. 1587]*

இவர்களின் இயற்பெயர் செய்குஅலி நயினார். இவர்களின் தந்தை பெயர் அஹ்மது. இவர்கள் காயல்

பட்டினம் முஹம்மது கல்ஜி பரம்பரையில் தோன்றினார்கள். அல்லாஹ்வுக்கு பெரிதும் அஞ்சி வழிபட்டு வந்ததனால் வணக்கவாளர் என்ற பொருள்படும் நுஸ்கி என்ற சிறப்புபெயரில் இவர்கள் அழைக்கப்பட்டனர். இவர்களின் வழிதோன்றல்கள் மார்க்க மேதைகளாகவும் மகான்களாகவும் விளங்கியுள்ளார்கள். இவர்களின் வழியில் தோன்றிய லுகவி வலியுல்லாஹ் தான் முதன் முதலாக அரபும், அரபுத் தமிழும் கொண்ட அகராதியைத் தயாரித்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நுஸ்கி வலி அவர்கள் ஹிஜ்ரி 995-ல் [கி. பி. 1587 கொல்லம் ஆண்டு 762] மரணமாகி மகுதூம் பள்ளியில் அடங்கியுள்ளார்கள்.

## 14. பெரிய சம்சுத்தீன் வலியுல்லாஹ்:-

[மரணம் ஹிஜ்ரி 1032 : கி. பி. 1623]

கல்வி கடலாகிய இப்பெரிய மகான் காயல்பட்டினத்தில் பிறந்து, அங்குள்ள கொடிமரச் சிறுநெய்னார் பள்ளியில் அடங்கப் பட்டிருக்கிறார்கள். இம்மாபெரும் இறைநேசச் செல்வரின் தகப்பனார் இல்மு கடலாகவும், கொடை வள்ளலாகவும், அல்லாஹ்வின் அருள் நேசராகவும் திகழ்ந்த செய்கு சலாஹுத்தீன் வலியுல்லாஹ் ஆவார். இவர்கள் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் பரம்பரையில் உதித்தவர்கள். பெரிய ஷம்சுத்தீன் அப்பா அவர்கள் பிறந்த வருடம் சரியாக தெரியவில்லை. ஹிஜ்ரி 950 இருக்கலாம் எனச்செல்லப் படுகிறது. இவர்களின் மாணவர்களில் ஒருவராகிய மகுதூம் சின்னீனாலெப்பை ஆலிம் (வலி) ஹிஜ்ரி 982-ல் அதிராம் பட்டினத்தில் பிறந்தவர்களாவர்.

பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்கள் சிறுவயதிலேயே எல்லா கலைகளையும், அவர்களின் தகப்பனார்

அவர்களிடமே கற்றார்கள். தந்தை அவர்களின் அறிவு. திறமை, உயர்பண்பு, எல்லாம் மகனுக்கு செவ்வனே அமைந்தன. கல்வி கடலாகவும், ஷரீஅத்திற்குச் சூரிய னாகவும், வழிகாட்டும் குருவாகவும் திகழ்ந்தார்கள். மறைவான கல்வியில் (இரிபான் ஹக்கீக்கத்) மேம்பட்டு வாழ்ந்தார்கள். இவர்களுக்கு பெண்கள் வாரிசுதான் உண்டு. கொடிமர சிறுநெய்னார் பள்ளியின் மேற்கு பகுதியில் அடங்கியிருக்கும் மகான் அப்துற்றகுமான் வலி இவர்களின் மருமகனாவார்கள். இவர்களும் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள். அல் ஆலிமுல் பாஸில் அல்வலியுய்யுல் காமில் அஷ்ஷெய்கு உவைஸ் (பெரிய நெய்னா லெப்பை) அவர்கள் பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களின் பேரர். பாட்டனாருக்குப் பக்கத்தி லுள்ள கல்தொட்டியில் அடங்கி இருக்கிறார்கள். பெரிய ஜும்ஆ பள்ளியின் தென்புறத்தில் அடங்கியுள்ள மகான் அப்துல் காதிர் என்ற லெப்பை அப்பா வலி (மாதுளை மரத்திற்கு மழை பெய்ய வைத்த லெப்பை அப்பா) அவர்கள் அஷ்ஷெய்கு உவைஸ் வலியுல்லாஹ் வின் மிகவும் நெருங்கிய உறவினர். அஷ்ஷெய்கு உவைஸ் வலியுல்லாஹ்வின் பேரர் சின்ன நெய்னா லெப்பை என்ற அஷ்ஷெய்கு உவைஸ் அவர்களும் சிறந்த மகான். இவர்கள் தான் ஹக்கீகத்து மாலையைக் கோர்வை செய்து உள்ளார்கள். இன்றும் பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களின் வாரிசுகளில் சிலர் காயல்பட்டினத் தில் வாழ்கிறார்கள். இந்நூல் ஆசிரியரும் இப்பெரியார் அவர்களின் வழிதோன்றலில் ஒருவர் என்பது குறிப் பிடத்தக்கது.

பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களைச் சுற்றி எப் போதும் உலமாக்கள் கூட்டம் இருக்கும். அவர்களிடம் கற்றவர்களில் பலர் சிறந்த அறிஞர்களாகவும், வலி யுல்லாகளாகவும் திகழ்ந்திருக்கிறார்கள். நாகூர் ஷாகுல்

ஹமீது ஆண்டகையிடம் பைஅத் பெற்று அவர்களின் ஊழியத்தில் சிலகாலம் இருந்த ஸதக்கத் நெய்னார் வலி அவர்களின் அருமை புதல்வரும், ஐந்து மாணிக்கங்களாகிய சம்சுத்தீன்வலி, அஹ்மதுவலி, சதக்கத்துல்லா வலி, ஸாம் ஷிஹாபுத்தீன் வலி, ஸலாஹூத்தீன் வலி, ஆகியவர்களின் தந்தையுமாகிய சுலைமான்வலி, இவர்களின் சீடர்களில் முக்கியமானவர்களாவார்கள். இவர்கள் தம் மக்களில் மூத்தவருக்கு குருநாதர் அவர்களின் பெயரையும், இளைய மகனுக்கு குருநாதர் அவர்களின் தந்தையாரின் பெயரையும் சூட்டி மகிழ்ந்துள்ளார்கள். அதிராம்பட்டினத்தில் தோன்றிய சிறந்த மார்க்க மேதையும், சிறந்த இறைநேசச் செல்வருமான மகுதூம் சின்னீனா லெப்பை ஆலிம் வலி அவர்கள் காயல் பட்டினம் வந்து மகான் பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களிடம் கல்வி கற்றார்கள். இவர்களிடம் கல்வி கற்ற பொருட்டால் குருநாதர்போன்று இவர்களும், மனிதர்களுக்கும், ஜின்களுக்கும் அதிராம்பட்டினத்தில் ஒரு மத்ரஸா நிறுவி ஓதிக் கொடுத்தார்கள் என்பதை அறிகிறோம். பிற்காலத்தில் கீழக்கரையில் ஓதிக் கொடுத்து கொண்டு இருக்கும்போது அங்கே மரணமாகி அடங்கியுள்ளார்கள். கீழக்கரையில் அடங்கியுள்ள வலிமார்களில் மூத்த வலியுல்லாஹ் இவர்கள்தான். அரபுத் தமிழ் எழுதும் முறையை முதன் முதலாக கண்டுபிடித்தவர்களாகிய காயல்பட்டினம் ஹாபிழ் அமீர் வலி. பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களின் சீடர்களில் ஒருவர். ஓர் இரவு தங்கள் குருவுடன் அவர்கள் வீட்டிற்கு சென்றபோது, குரு அவர்கள் வீட்டில் நுழைந்து விட்டார்கள் சீடரின் காதில் இங்கு நில் என்று சொல்லியதுபோல் விழுந்தது. மறுநாள் குரு அவர்கள் சுபுஹூ தொழ பள்ளிக்குச் செல்ல கதவைத் திறக்கும்போது, சீடர் நின்று கொண்டிருப்பதை அறிந்து காரணம் கேட்க,

தாங்கள் தான் நிற்க சொல்லியதுபோல் என் காதில் விழுந்தது என்று கூற, மாணவரின் உயர் பண்பை மெச்சி அவர்கள் நாவில் உமிழ அன்று முதல் அமீர் சிறந்த ஹாபிழாகவும் வலியாகவும் மாறினார்கள். பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களிடம் பயின்ற வலி மார்கள் எல்லாம் ஜின்களுக்கு ஓதிக் கொடுக்கக் கூடிய வர்களாகவும் திகழ்ந்துள்ளார்கள்.

பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்கள் இரவில் நின்று வணங்கக் கூடியவர்களாகவும், பகலில் நோன்பு பிடிக்க கூடியவர்களாகவும், திக்ர், பிக்ரில் மூழ்கியவராகவும் வாழ்ந்தார்கள். இவர்களிடம் மனிதர்கள் மட்டுமன்றி ஜின்களும் கல்வி பயின்றார்கள். பொதுமக்கள், ஆலிம் களில் பலர் இவர்களால் பாக்கியம் பெற்றுள்ளார்கள். துஆ—கபூல் செல்யப்பட்டவர்களாக இருந்தார்கள். சிறந்த உபகாரியாகவும், நற்பண்பின் இருப்பிடமாகவும் திகழ்ந்தார்கள். பல மாபெரும் அற்புதங்களை நிகழ்த்தி யுள்ளார்கள். இன்றும் இவர்கள் அடக்கவிடத்திற்கு ஜின்கள் வந்து போய்கொண்டிருக்கின்றன என்று இவ் வூர் பெரியவர்கள் பலர் சொல்கிறார்கள். இவர்கள் வாழ்ந்த காலத்தில் இவர்கள் வலிமார்களின் கோமா னாக விளங்கியுள்ளார்கள். இவர்கள் ஹிஜ்ரி 1032-ல் ஷஃபான் மாதம், ஒரு ஞாயிற்றுக்கிழமை இரவு கால மானார்கள். இவர்களின் கந்தூரி வைபவம் ஒவ்வொரு ஆண்டும் காயல்பட்டினம் கொடிமர சிறுநெய்னார் பள்ளியில் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

## 15. சுலைமான் வலியுல்லாஹ்:-

[மரணம் ஹிஜ்ரி 1079 : கி. பி. 1669]

இவர்கள் ஹிஜ்ரி 1000 ஆண்டில் காயல்பட்டினத் தில் அவதரித்தார்கள். இவர்களின் தந்தை சதக்கு

நெய்னார். இவர்களின் பாட்டனார் கான்குட்டியார் இப்னு ஷைகு அப்துல் காதிர். சுலைமான் வலி அவர்களின் தகப்பனார் சதக்கு நெய்னார்வலி, மகான் சாஹுல் ஹமீது ஆண்டகையிடம் பைஅத் பெற்று அவர்களின் மதிப்பிற்குரிய சீடராக வாழ்ந்தார்கள். சாஹுல் ஹமீது ஆண்டகை அவர்கள், சதக்கு நெய்னார்வலி குடும்பத்தில் வலிமார்களும், குத்புமார்களும் தோன்றுவார்கள் என ஆசி கூறியுள்ளார்கள். இவர்களின் பரம்பரையினர் அபூபக்கர் (ரலி) அவர்களின் வழி வந்தவர்கள்.

சுலைமான் வலி அவர்கள், காயல்பட்டினத்தில் வாழ்ந்த மனு, ஜின்களுக்கு மறைபோதித்த வலிகள் கோமான் பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களிடம் கல்வி கற்றார்கள். அதிராம்பட்டினம் மக்தூம் சின்னநெய்னா லெப்பை ஆலிம் வலி அவர்களும் இவர்களுடன் ஒன்றாக கல்வி பயின்றார்கள். காயல்பட்டினத்தின் மிக பழமையானதும் கி. பி. 843-ல் கட்டப்பட்டதுமான பெரிய ஜும்ஆ பள்ளியில் வைத்து, பக்தாது ஷைகு அஹ்மது ஜமாலுத்தீன் அவர்கள் ஒரு வெள்ளிக்கிழமை ஜும்ஆ தொழுகைக்குப் பின் சுலைமான் வலியுல்லாஹ் அவர்களுக்கும், திருமங்கலக்குடி அபூபக்கர் வலியுல்லாஹ் அவர்களுக்கும், கோட்டைப்பட்டினம் இராவுத்தர் சாகிப் என்ற முஹம்மது ஷாஹ்வலியுல்லாஹ் அவர்களுக்கும் "பைஅத்" கொடுத்து சிறப்பித்தார்கள். "விலாயத்" என்ற மகிமையான பதவியும் அல்லாஹ்வின் அருளால் நல்கப்பட்டது. மகான் ஷைகு அஹ்மது ஜமாலுத்தீன் ஒரே நேரத்தில் 24 ஊர்களில் தொழவைத்தார்கள் என்று சுலைமான் வலி அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

சுலைமான்வலி அவர்கள் எமனேஸ்வரத்தில் இமாமாக பணியாற்றிய ஒரு பெரியாரின் மகள் பாத்திமாவை

மணந்து ஐந்து மகான்களைப் பெற்று எடுத்தார்கள். சம்சுத்தீன் வலி, அஹ்மதுவலி, சதக்கத்துல்லாஹ்வலி, ஸாஹ்ஷிஹாபுத்தீன் வலி, ஸலாஹுத்தீன் வலி ஆகிய ஐம்பெரும்வலீ சிறுவர்களாக இருக்கும்போதே பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள். சுலைமான்வலி அவர்களுக்கு ஒரு மகளும் உண்டு. தங்கள் குருநாதர் சம்சுத்தீன்வலி அவர்களின் பறகத்தை நாடி மூத்த மகனுக்கு அவர்களின் பெயரையும், கடைசி புதல்வனுக்கு அவர்களின் தந்தையின் பெயரையும் சூட்டி மகிழ்ந்தார்கள். சுலைமான் வலி அவர்கள் மனிதர்களின் தன்மையை அறியக்கூடிய சக்தியையும் உலகில் எங்கும் சுற்றிவரக் கூடிய சக்தியையும் அல்லாஹ்வின் அருளால் பெற்றார்கள். இதனால் ஹஜ் காலங்களில் மக்காவிலுள்ள மஸ்ஜிதுல் ஹரமில் இருப்பார்கள். அதே நேரத்தில் காயல் பட்டினத்திலும் இருப்பார்கள்.

ஒருமுறை சுலைமான் வலி தங்களுடன் ஒரு சிறுவரை அழைத்துக்கொண்டு கஃபா சென்றார்கள். தவாபு செய்துவிட்டு ஊர்திரும்பும்போது சிறுவரை அழைத்துவர மறந்துவிட்டார்கள். ஊருக்கு வந்த பிறகு ஞாபகம் வந்தது. அவர்கள் வீட்டில் பணிபுரியும் பெண் நடந்த விஷயத்தைத் தெரிந்து கொண்டாள். அப்பெண்மணி மகானிடம் அனுமதிபெற்று சற்று நேரத்தில் மக்கா சென்று அக்குழந்தையை (சுலைமான் வலி அவர்களின் இளைய மகன்) அழைத்து வந்தாள். இதைக் கண்ட ஊர்மக்கள் இப்பெண்ணின் செயலை ஆச்சரியமாக எண்ணினார்கள். அப்போது அப்பெண்மணி என்னுடைய குருநாதர் சுலைமான் வலி அவர்களின் உயரிய வலிமையால்தான் இது நடந்ததே தவிர என்னுடைய திறமை ஏதும் இல்லை என்றாள். தனக்கு இத்தகைய பாக்கியம் கிடைக்க காரணம் சுலைமான் வலி அவர்களின் சட்டைகளைக் கழுவும்போது அச்

சட்டைகளைக் கழுவிய தண்ணீரை மறைமுகமாக குடித்து வந்ததுவே என்று பகர்ந்தாள்.

சுலைமான் வலி அவர்கள் அல்லாஹ்வின் நல்லடியாராகவும், சிறந்த இறைநேசச் செல்வராகவும் திகழ்ந்துள்ளார்கள். பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள். மக்காவில் ஒரிடத்தில் ஏற்பட்ட தீயை அணைக்க. காயல்பட்டினத்தில் ஒரு பள்ளியிலிருந்து ஒலுவு செய்யும் போது தண்ணீரை வீசி எறிந்து அமர்த்தினார்கள் என்பதையும் அறிகிறோம். இவர்கள் ஹிஜ்ரி 1079 ஆண்டு ரபியுல் அவ்வல் பிறை 19 செவ்வாய் கிழமை காலையில் தமது 79 வயதில் மரணமாகி காயல்பட்டினம் மரைக்கார்பள்ளியில் அடங்கியுள்ளார்கள். இவர்களின் ஐந்துமக்களும் சிறந்த இறைநேசச் செல்வர்களாக வாழ்ந்துள்ளார்கள். இவர்களின் மகனார் சதக்கத்துல்லா அப்பா அவர்கள் "குத்பு" ஆகவும் இருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. சதக்கத்துல்லா அப்பா அவர்களின் பேரர் சதக்கத்துல்லா (முஹம்மது லெப்பை வலி அவர்களின் மகன்) என்ற பெரியார், தங்கள் பாட்டனார் சுலைமான் வலி அவர்களிடம் வேண்டிக் கொண்டதின் பேரில் அஹ்மது என்ற ஆண் மகனைப் பெற்றார்கள். இவர்கள் தான் மகான் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களின் தந்தையாவார் என்பது குறிப்பிடத்தக்கது. சுலைமான் வலி அவர்களின் கந்தூரி வைபவம் ஒவ்வொரு ஆண்டும் காயல் பட்டினம் மரைக்காயர் பள்ளியில் ரபியுல் அவ்வல் மாதம் விமரிசையாக கொண்டாடப்படுகிறது.

சுலைமான் வலி அவர்களின் மக்களில் சம்சுத்தீன் வலி அவர்கள் காயல்பட்டினம் கொடிமரசிறுநெய்னார்

பள்ளியிலும், அஹ்மது வலி மஞ்சக் கொல்லையிலும் சதக்கத்துல்லா அப்பா அவர்கள் கிழக்கரையிலும், ஸாம் ஷிஹாபுத்தீன் வலி அவர்கள் காயல்பட்டினம் அப்பாபள்ளியிலும், ஸலாஹுத்தீன் வலி அவர்கள் களக்காடு ஏர்வாடியிலும் அடங்கப்பெற்றுள்ளார்கள்.

## 16. ஹாபிள் அமீர் வலியுல்லாஹ்:

ஹாபிள் அமீர் வலி அவர்களின் பிறந்த வருடம், இறந்த வருடம் சரியாகத் தெரியவில்லை. ஆனால் இவர்கள் பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களின் மாணவர் என்பதிலிருந்து, இவர்கள் வாழ்ந்த காலத்தை நாம் அறியமுடிகிறது. சுமார் ஹிஜ்ரி 980 முதல் ஹிஜ்ரி 1070 வரை வாழ்த்திருக்கலாம் என கணிக்க முடிகிறது. இவர்கள் காயல்பட்டினத்தில் பிறந்து அங்குள்ள நெசவுத்தெருவிலுள்ள ஹாபிள் அமீர் அப்பா பள்ளியில் அடங்கியுள்ளார்கள்,

இவர்கள் ஒரு நாள் இரவு தங்கள் குருநாதர், மனுஜின்களுக்கு ஓதி கொடுத்த மகான் பெரியசம்சுத்தீன் அப்பா அவர்களுடன் அவர்கள்வீட்டிற்கு சென்றார்கள். குருநாதர் வீட்டிற்குள் போய்விட்டார்கள். இவர்கள் காதில் ''இங்கே நில்'' என்று சொல்லியது போல் கேட்டது. இரவு முழுவதும் அப்படியே நின்று விட்டார்கள். விடியற்காலையில் தொழுவதற்காக பள்ளிக்குச் செல்ல கதவைத் திறக்கும் போது தம் மாணவர் நின்று கொண்டிருப்பதைக்கண்டு காரணம் வினவ, ''தாங்கள் தானே இங்கு என்னை நிற்க சொன்னீர்கள்'' என்று உரைத்தார்கள். அதைக் கேட்டு மகிழ்ந்த பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்கள் இவர்களை ''ஹாபிளு அமீரே'' என புகழ்ந்து இவர்களில் வாயில் தங்கள் முபாரக்கான உமிழ்நீரைச் செலுத்த இவர்களுக்கு சிறந்த ஞாபக சக்தியும், அறிவு கூர்மையும் ஏற்பட்டது.

தங்கள் குருநாதர் அவர்களின் பறக்கத்தால் நல்ல பாடமுள்ள ஹாபிளாகவும், சிறந்த மார்க்க அறிஞரா கவும், ஆன்மீக மேதையாகவும் திகழ்ந்தார்கள். இவர் களே அரபுத்தமிழ் எழுதும் முறையை முதன் முதலாக கண்டுபிடித்தவர்கள் என்பதையும் அறிகிறோம். பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களிடம் கல்விகற்ற சிறந்த மகான்களாகிய இவர்களும் சுலைமான்வலி அவர்களும் சின்ன நெய்னா லெப்பை ஆலிம் வலி அவர்களும் ஜின் களுக்கு தங்கள் குருநாதர் போன்று ஓதி கொடுத்து இருக்கிறார்கள். ஜின்கள் இவர்களுக்கு பணிவிடைகள் செய்து இருக்கின்றன.

ஹாபிள் அமீர்வலி அவர்கள் பல அற்புதங்களைச் செய்து காட்டியுள்ளார்கள். ஒரு பெண்ணும் அவளின் மகனும், இவர்களின் அடக்கஸ்தலத்திலுள்ள ஒரு தென்னை மரத்தில் இவர்களின் உத்தரவில்லாமல் தேங் காயை பறித்ததற்காக அவர்கள் நொண்டியாகவும், சப் பாணியாகவும் மாறினார்கள் என்றும், பின் அப்பா அவர்களிடம் மன்னிப்பு கேட்டு பழைய நிலையை அடைந்தார்கள், என்பதையும் அறிகிறோம். இதுபோல ஒரு நாள் ஓர் அரசாங்க அதிகாரி குதிரையின் மீது இவர் களின் தர்ஹா வழியாகச் செல்லும்போது இறங்காமல் மமதையாக செல்ல நினைக்கும் போதும், அவருடைய குதிரையின் கால்கள் மண்ணில் புதைந்து நின்றுவிட்டது குதிரையின் நிலை மோசமடைவதைக் கண்டு இவர் அப்பா அவர்களின் தர்ஹாவில் நின்று மன்னிப்பு கேட்க, குதிரை பழைய நிலையை அடைந்து நடக்கத் துவங்கியது. இம்மகானின் கந்தூரி ஒவ்வொரு ஆண்டும் துல்கஅதா பிறை 14ல் காயல்பட்டினம் நெசவுத் தெரு விலுள்ள ஹாபிழ் அமீர் அப்பா பள்ளியில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## நிறைவுரை

காயல்பட்டினத்தில் ஹிஜ்ரி 300 முதல் ஹிஜ்ரி 1000 வரையில் பிறந்து வாழ்ந்து, மறைந்த சில மூத்த இறை நேச செல்வர்களின் வரலாறுகளுடன் இந்நூலை நிறைவு செய்கிறேன். அல்ஹம்துலில்லாஹ். குறைகள் இருப்பின் கற்றவர்கள் கண்டு அறிவிப்பின் அடுத்த பதிப்பில் அவற்றைக் களைந்திட முயல்வேன். இவ்வூரில் இன்னும் பல இறைநேச செல்வர்கள் இக்கால கட்டத்தில் வாழ்ந்து இருக்கிறார்கள். அவர்களைப் பற்றியக் குறிப்புகள் இருந்தால் பெருமனதுடன் தந்து உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன். இவ்வூரில் ஹிஜ்ரி 1000க்குப் பின் தோன்றிய இறைநேச செல்வர்களில் சிலரின் வரலாறுகள் புத்தகவடிவில் வெளிவந்து விட்டன. ஆனால் பலரின் வரலாறுகள் இன்னும் வெளிவரவில்லை இன்ஷா அல்லாஹ் அவர்களின் வரலாறுகளை இரண்டாம் பாகமாக வெளியிட முயற்சி செய்கிறேன். என் பணி தொடர துஆ இறைஞ்சுமாறு அனைவரையும் வேண்டுகிறேன்.





கடற்கரைப் பள்ளிவாசல் இருந்த இடம்



முஹியித்தீன் மெட்ரிக்குலேசன்
ஹையர் செகண்டரி ஸ்கூல்